கற்பழித்து, கொலைபுரிந்து, தீ வைத்துச் சூறையிட்ட அந்தப் பர்மிய வீரர்கள் ஆயிரக்கணக்கானவர்கள்தான் இந்தத் தலைமுறையில் புது ஜன்மம் எடுத்தார்கள்! வெவ்வேறு தேசங்களிலிருந்து இதே மண்ணுக்கு வந்தார்கள். ஜப்பானியர் கைகளில் யுத்தக் கைதிகளாக அகப்பட்டு கொடூர முறைகளில் உயிர்களை இழந்தார்கள். சரித்திரத்தைக் குறை கூறாதே தம்பி! மனிதச் செயல்களைக் குறைகூறு! வினை எப்போதும் யாரையும் விடாது! அதை மனிதன் புரிந்து கொண்டு செயல்பட்டால் இன்பம் துன்பம் இரண்டுமற்ற அமைதியை அடையலாம்! இதைத்தான் புத்தபகவான் கூறினார். நாங்கள் அதை பிரசாரப்படுத்தி வருகிறோம். உனக்குப் பகவான் ஆசி பெருகட்டும்! ஓம் சாந்தி, சாந்தி, சாந்தி!'' என்றார் அவர்.

பிறகு எழுந்து சரசரவென்று நடந்தார். அந்த இரவு நிலவில் அவர் அந்த சமாதிக் கூட்டத்து வாசல் வரை போவது தெரிந்தது. பிறகு அவரது ஸ்தூல உடல் மெல்ல மெல்ல காற்றோடு கரைந்து போயிற்று.

சாய்ந்த நிலவு காய்ந்து கொண்டிருந்தது. பிரமை பிடித்தது போல உட்கார்ந்திருந்தேன்.

முதல் காலைப் பறவையின் குரல் கேட்டதும், பிரமை கலைந்து எழுந்து குவாய் ஓட்டலை நோக்கி நடந்தேன்.

**முற்றும்**



# ஸ்ரீ வேணுகோபாலன்

மனத்தை உருக்கும் விதத்தில் ஏராளமான சிறுகதைகளும், நாவல்களும் எழுதி வரும் ஸ்ரீ வேணுகோபாலன், நெல்லை மாவட்டத்தைச் சேர்ந்த ஒரு பட்டதாரி. இவரது முதல் கதை 1949ல் தினமணி கதிரில் பிரசுரமாகியது. அது முதல் இருபத்தெட்டு ஆண்டுகளாகத் தொடர்ந்து எழுதி வருகிறார் இவர்.

இவரது தொன்மை வாய்ந்த இந்த நாடகமான ''அமைச்சர் மதுரகவி''யைப் புகழ்பெற்ற டி.கே.எஸ். சகோதரர்கள் நடித்திருக்கிறார்கள். இவருடைய பல கதைகள் இந்திய மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

இவருடைய ''ஊதாப்பூ கண் சிமிட்டுகிறது'', ''நந்தா என் நிலா'' ஆகிய நாவல்கள் திரைப்படங்களாக வந்துள்ளன. இவர் ஊதாப்பூ இதழின் ஆசிரியராகவும் இருக்கிறார்.